श्री गुहो विजयते

# सुब्रह्मण्यभुजङ्गम्

## श्री शङ्करभगवत्पाद विरचितम्

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் இயற்றிய

# ஸுப்ரஹ்மண்ய புஜங்கம்



தமிழில் உரை

வைத்ய ஸ்ரீ S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி

श्री गुहो विजयते

# सुब्रह्मण्यभुजङ्गम्

## श्री शङ्करभगवत्पाद विरचितम्

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் இயற்றிய

# ஸுப்ரம்ஹண்ய புஜங்கம்



*தமிழில் உரை*

வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி

# ஸுப்ரம்ஹண்ய புஜங்கம்

ஸ்ரீசங்கர பகவத் பாதர்கள் பாரததேசத்தை மூன்று முறை வலம் வந்தார். தென்னாட்டு யாத்திரையில் ராமேச்வரம், ஸேது, மதுரை, திருவானைக்கா, ஸ்ரீரங்கம், காஞ்சீபுரம் முதலான பல க்ஷேத்ரங்களில் இறைவனைக் கண்டுகளித்தார். மேற்குக் கடலோரத்தில் சந்தன மலை, கந்த (சந்தன) சைலம், கந்தமாதனம் என்று புகழ்பெற்ற குன்றில் குன்றுதோறாடும் குஹப்பெருமானைக் கண்டு ஸுப்ரஹ்மண்ய புஜங்கம் என்ற துதியால் துதித்தார். அருட் சக்திமிக்க ஸ்தோத்திரமிது. காஞ்சீகாமகோடி பீடத்ததிபர் ஸ்ரீ சங்கர விஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் சென்னையில் சங்கராலயத்தில் 30.9.2001 அன்று நடந்த நிகழ்ச்சியில் இந்தத் துதியின் ஏழாவது சுலோகத்தின் பின் பகுதியான 'குஹாயாம் வஸந்தம் ஸ்வபாஸா லஸந்தம் ஜனார்திம் ஹரந்தம் ப்ரயாமோ குஹம் தம்' என்பதை ஒவ்வொரு சுலோகத்தோடும் சொல்லி வர ஒவ்வொரு சுலோகமும் மஹாமந்திரமாகி, விரும்பியதனைத்தையும் தரும் என்று உபதேசித்தார்கள். இந்தத்துதியில் குஹனாக குமாரனாக ஸ்கந்தனாக ஷண்முகனாக கார்திகேயனாக ஸ்ரீபகவத் பாதர்கள் மனம் நிறைந்து இறைவனை அழைத்து இறைவனின் பரிவை உணர்ந்து அவருடன் நேரில் பேசுவதைக் காணலாம்.

விநாயகர், சிவன், தேவி, விஷ்ணு, ஸூர்யன், குகன் என்ற ஆறு வடிவங்களில் உபாசனை புரியும்படி சங்கர பகவத்பாதர்கள் உபதேசிக்கிறார்கள். ஸுப்ரம்ஹண்யரைப் பற்றி அவர் இயற்றிய ஸ்தோத்திரம் இது ஒன்றே. சிவபாதாதி கேசாந்த ஸ்தோத்திரத்தில் சிவ குடும்பத்தினராக குகர் ஒரு சுலோகத்தில் துதிக்கப்பெறுகிறார்.

यःपुण्यैर्देवतानां समजनि शिवयोः श्लाघ्यवीर्यैकमत्यात्

यन्नाम्नि श्रूयमाणे दितिजभटघटाः भीतिभारं भजन्ते ।

भूयात्सोऽयं विभूत्यै निशित शरशिखा पाटित क्रौञ्चशैलः

संसारागाध कूपोदरपतित समुत्तारकस्तारकारिः ।

ய: புண்யை: தேவதாநாம் ஸமஜநி ஶிவயோ: ஶ்லாக்ய வீர்யை கமத்யாத்,
யந்நாம்நிஶ்ரூயமாணே திதிஜபடகடா: பீதிபாரம் பஜந்தே ।
பூயாத் ஸோऽயம் விபூத்யை நிசிதசரசிகா பாடித க்ரௌஞ்சஶைல:
ஸம்ஸாராகாத கூபோதரபதித ஸமுத்தாரகஸ்தாரகாரி: ।

*''தேவர் செய்த புண்யத்தால் சிவதம்பதியரின் பெருமதிப்பிற்குரிய வீரிய இணைவில் தோன்றியவர், அவரது பெயரைக் கேட்ட உடனேயே அசுரப்படை பயத்தின் சுமை அழுத்துவதை உணரும். தன் கூர்மை மிக்க அம்பால் குரௌஞ்ச மலையைத் துளைத்தவர், பிறவித் தொடரெனும் ஆழ் கிணற்றில் வீழ்ந்தவர்களை மீட்பவர். தாரகாசுரனின் எதிரி. அவர் நமக்குப் பெருவாழ்வு அளிக்கட்டும்''.*

ப்ரஹ்ம - பரம்பொருள். எல்லாக் குறிப்பீட்டிற்கும் அப்பாற்பட்டது. அது நமது உணர்விற்குப் புலப்பட வேதங்கள் உதவுவதால் வேதமும் 'ப்ரம்ஹ'. அவற்றால் உணர்த்தப்பெறுகிற இறை தத்துவமும் 'ப்ரம்ஹ'. இம்மூன்று நிலைகளுக்கும் அனுகூலமான தெய்வம் ப்ரம்ஹண்யம். அவற்றில் மிக அழகானது முருகானது ஸுப்ரம்ஹண்யம். அவரைத் துதிக்கும் துதி இது. இந்தத் துதிக்கான இந்த சந்த அமைப்பை புஜங்கப்ரயாதம். புஜங்கம் என்பர். அடிமேல் அடிவைப்பது போலிராமல் மார்பாலும் தோளாலும் அசைந்து ஊர்வது பாம்பின் இயல்பு. இடையறாத அசைவு. ஒரே சீராக வளைந்து வளைந்து நகர்கிற அசைவு. அதனால் உரகம் புஜங்கம் என்று பாம்பைக் கூறுவர். இந்த சந்த அமைப்பும் அத்தகைய தென்பதால் இது புஜங்கம். டடாடா டடாடா டடாடா டடாடா என்ற நான்கு வளைவுகள். டடாடா என்பது டடட் டா டடா டட் டடட் டட் என்றும் வளையும். தென்னாட்டில் பாம்பின் வடிவில் முருகனை வழிபடுவதும். பாம்பைத் தெய்வமாகக் கொள்வதுமுண்டு. அரசமரத்தடி விநாயகருக்குத் தம்பி நாகர் வடிவில் துணை நிற்பார்.

### பதினாறும் பெற்றுப் பெரு வாழ்வு வாழ
### எல்லா இடையூறுகளும் நீங்க
### ஶ்ரீ கணபதி ப்ரார்த்தனை

सुमुखश्चैकदन्तश्च कपिलो गजकर्णकः ।
लम्बोदरश्च विकटो विघ्नराजो विनायकः ॥

धूमकेतुर्गणाध्यक्षः फालचन्द्रो गजाननः ।
वक्रतुण्डः शूर्पकर्णो हेरम्बः स्कन्दपूर्वजः ॥

षोडशैतानि नामानि यः पठेत् शृणुयादपि ।
विद्यारम्भे विवाहे च प्रवेशे निर्गमे तथा ।
सङ्ग्रामे सर्वकार्येषु विघ्नस्तस्य न जायते ॥

ஸுமுகஶ்ச ஏகதந்தஶ்ச கபிலோ கஜகர்ணக: ।
லம்போதரஶ்ச விகடோ விக்க்நராஜோ விநாயக: ॥

தூமகேதுர்கணாத்யக்ஷ: பாலசந்த்ரோ கஜாநந: ।
வக்ரதுண்ட: ஶூர்பகர்ணோ ஹேரம்ப: ஸ்கந்தபூர்வஜ: ॥

ஷோடஶைதாநி நாமாநி ய: படேத் ஶ்ருணுயாதபி ।
வித்யாரம்பே விவாஹே ச ப்ரவேஶே நிர்கமே ததா ।
ஸங்க்ராமே ஸர்வகார்யேஷு விக்நஸ்தஸ்ய ந ஜாயதே ॥

*ஸுமுகர், ஏகதந்தர், கபிலர், கஜகர்ணகர், லம்போதரர், விகடர், விக்க்நராஜர், விநாயகர், தூமகேது, கணாத்த்யக்ஷர், ப்பாலசந்த்ரர், கஜாநநர், வக்ரதுண்டர், சூர்பகர்ணர், ஹேரம்பர், ஸ்கந்த பூர்வஜர் என்ற இந்த பதினாறு நாமங்களைப் படிப்பவனுக்கும், பிறர் சொல்லிக் கேட்பவனுக்கும் கல்வியைத் தொடங்கும் போதோ, விவாஹத்திலோ, புது க்ருஹப்ரேவசத்திலோ, பிரயாணத்திலோ, போரிலோ, மற்றும் எந்தப் பணியிலும் நடுவே இடையூறு நேராமல் தொடங்கிய பணி நன்கு நிறைவு பெறும்.*

---

௨

# श्री सुब्रह्मण्यभुजङ्गम्

## श्री शङ्करभगवत्पादविरचितम्

## ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய புஜங்கம்

## ஸ்ரீ சங்கரபகவத் பாதர்கள் இயற்றியது

1

सदा बालरूपाऽपि विघ्नाद्रिहन्त्री महादन्तिवक्त्राऽपि पञ्चास्यमान्या ।
विधीन्द्रादिमृग्या गणेशाभिधा मे विधत्तां श्रियं कापि कल्याणमूर्तिः ॥

ஸதா பாலரூபா(அ)பி விக்க்நாத்ரிஹந்த்ரீ
மஹாதந்திவக்த்ரா(அ)பி பஞ்சாஸ்யமாந்யா ।
விதீந்த்ராதிம்ருக்யா கணேஶாபிதா மே
விதத்தாம் ஶ்ரியம் கா(அ)பி கல்யாணமூர்த்தி: ॥ 1 ॥

*"கணேசர் என்ற பெயருள்ளதொரு மங்களவடிவம் எனக்கு மேன்மையை அளிக்கட்டும். அது பாலனுக உருவகப்படுத்தப் பெற்ற போதும் மலேபோன்ற இடையூறுகளே அகற்றும். பெரும் யானே முகத்துடன் தோன்றினுலும் சிவபெருமான் எனும் சிங்கத்தின் நன்மதிப்புக்குரியது. ப்ரஹ்மாவாலும் இந்திரனுலும் ஏனேயோராலும் தேடப்பட்டதாயினும் கூட்டத்தின் தலேவராக முன் நிற்பது. அந்த மங்களவடிவம் நன்மை புரியட்டும்."*

சிலேடையால் அழகிய சுலோகம் இது. சிறுவனுகக் காட்சி தருபவர் மலேயைப் பிளக்கிருர். யானேயாகத் தோன்றுபவர் சிங்கத்தால் மதிக்கப் பெறுபவர். சிவ பெருமானுக்கும் சிங்கத்திற்கும் பஞ்சாஸ்ய—பஞ்சமுக என்ற பொதுப் பெயருண்டு. சிவபெருமானுக்கு ஐந்து தலேகள். அதனுல் அவர் பஞ்சாஸ்யர். பிடரியுடன் கூடிய சிங்கத்தின் முகம் விரிந்து காணும். விரிந்து

காண்கிற முகம் பஞ்சமுகம். (மிகவும் விரிந்துள்ளதால் இந்த உலகம் ப்ரபஞ்சம்.) ப்ரம்மா முதலானோர் தேடியும் காணப் பெறுதவர். பலவகைப்பட்ட கணங்களுக்குத் தலைமை வகிக்கிறார். கணத்தைச் சேர்ந்தவர். அவரை எளிதில் காணமுடிகிறது. தான் என்ற அகந்தை இன்றி கூட்டத்தில் ஒருவராக்கிக் கொண்டவருக்கு எளியவர். உலகத்தின் அதிபதி எனத் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்பவருக்கு தூரத்தில் உள்ளவர். பிரியமானதும், ஹிதமானதும் மங்களமாயில்லாததாகலாம். மங்களமானது பிரியமாயும் இதமாயும் அவசியமிருக்கும். பிள்ளையார் மங்களமே வடிவானர்.

திருச்செந்தூரில் முருகனின் கோவிலுக்கருகே உள்ள **தூண்டுகை விநாயகர்.** மிகவும் வரப் ப்ரஸாதி, குகப் பெருமானைக் காணத் தூண்டுபவர். இவரைத் தரிசித்த பிறகே குகனைக் காணச் செல்வர். இவரைச் சங்கரபகவத் பாதர்கள் இந்த சுலோகத்தால் துதிக்கிறார் என்பர்.

–2–

न जानामि शब्दं न जानामि चार्थं न जानामि पद्यं न जानामि गद्यम् ।
चिदेका षडास्या हृदि द्योतते मे मुखान्निःसरन्ते गिरश्चापि चित्रम् ॥

ந ஜாநாமி ஶப்தம் ந ஜாநாமி சார்த்தம்
ந ஜாநாமி பத்யம் ந ஜாநாமி கத்யம் ।
சிதேகா ஷடாஸ்யா ஹ்ருதி த்யோததே மே
முகாந்நிஸ்ஸரந்தே கிரஶ்சாபி சித்ரம் ॥

*"நான் சொல் அறியேன்; சொல்லின் பொருளறியேன். செய்யுள் அறியேன். உரை நடை அறியேன். ஆனல் என் உள்ளத்தினுள் ஒரு பேரறிவொளி துலங்குகிறது. வாயிலிருந்தும் சொற்கள் தாமே வெளிப்படுகின்றன. இது விந்தையே."*

சிவபெருமானது ஐந்து முகங்களும் அவரை நோக்கி ஒன்றிய சக்தியின் ஒரு முகமும் பொருந்தி ஏற்ற வடிவமே ஆறு முகரானது. ஆறு கிருத்திகை தேவிகளின் தாய்மையை அனுபவிக்கவும், ஆறுமுகங்கள் முன் நின்றன. ஒரே சித்தெனும் பேரொளிதான்

சிவனாகவும், சக்தியாகவும் விரிந்தது. மறுபடி ஆறு முகங்களாக அது விரிந்தது. சித் ஏகா. சித் என்பது பேரறிவு. எல்லா அறிவுகளுக்கும் மூலம். பரம் பொருள் நிலையில் அது ஒன்றே. பிரகாசநிலையிலிருந்து உள்ளத்தில் விமர்சநிலை அடையும் போது பரா முதலிய வாக்சக்தியலையாகி வாயில் வைகரியாக வெளியாகிறது. அதன் விந்தைக்குரிய விளைவே கவிதை என்கிறார்.

## –3–

मयूराधिरूढं महावाक्यगूढं मनोहारिदेहं महच्चित्तगेहम् ।
महीदेवदेवं महावेदभावं महादेवबालं भजे लोकपालम् ॥

மயூராதிரூடம் மஹாவாக்யகூடம்
மநோஹாரிதேஹம் மஹச்சித்தகேஹம் ।
மஹீதேவதேவம் மஹாவேதபாவம்
மஹாதேவபாலம் பஜே லோகபாலம் ॥

*"மயில் மீது ஏறி அமர்ந்தவர், உபநிடதத்தில் பரம் பொருளை விளக்குகின்ற மஹாவாக்யங்களின் மறை பொருளாயிருப்பவர். மனத்தை ஈர்க்கின்ற பேரழகுள்ள வடிவமுள்ளவர், மகான்களின் உள்ளத்தில் குடியிருப்பவர். அந்தணர்களால் வேள்விகளில் வழிபடப் பெறுகிற தெய்வம். பேரிலக்கியமாகிற வேதங்களின் உட்பொருள். (தாமே வேதமாக உருக்கொண்டவரும் கூட) உலகைக் காக்கின்ற அந்த மஹாதேவரின் சிறு புதல்வரை வழிபடுகிறேன்."*

வேதமே மயிலாகிப் பரம் பொருளாகிய குகனை முதலில் தாங்கிற்று. சிவ வீர்யத்தைத் தாங்கிச் சரவணப் பொய்கையில் சேர்த்த அக்னி தன்புதல்வனைச் சீராட மயிலானார். மயூரேச்வரத்தில் (மோரேகாம்) விநாயகர் மயூரேசுவரராகத் தோன்றியபோது விநதையின் மகனை மயூரனைத் தன் வாகனமாக்கிக் கொண்டார். அவதாரப் பணி முடிந்ததும் அதனைத் தன் தம்பிக்கு அளித்தார். சூரனுடன் போரிடவந்த தேவஸேனைத் தளபதியான குஹனை இந்திரனே மயிலாகித் தாங்கினான். சூரனும் போரின் முடிவில் குஹனுடன் இணைய மயிலானான். எல்லா மயில்களும் வேதமயிலில் லயமடைந்தன.

-4-

यदा सन्निधानं गता मानवा मे भवाम्बोधिपारं गतास्ते तदैव ।
इति व्यञ्जयन् सिन्धुतीरे य आस्ते तमीडे पवित्रं पराशक्तिपुत्रम् ॥

யதா ஸந்நிதாநம் கதா மாநவா மே
பவாம்போதிபாரம் கதாஸ்தே ததைவ ।
இதி வ்யஞ்ஜயந் ஸிந்த்துதீரே ய ஆஸ்தே
தமீடே பவித்ரம் பராஶக்திபுத்ரம் ॥

*''எனது ஸந்நிதானத்தை மக்கள் எப்போது வந்தடைகின்றனரோ, அப்போதே அவர்கள் பிறவிப் பெருங்கடலின் கரை சேர்ந்து விடுகின்றனர்.'' என்று நமக்கு உணர்த்தவே கடற்கரையில் எவர் அமர்ந்துள்ளாரோஅந்த தூய்மைமிக்க பராசக்திமைந்தனைத் துதிக்கிறேன்.''*

இந்த ஸ்தோத்ரத்தினுல் துதிக்கப் பெறுபவர் திருச்செந்திலாண்டவன் என்ற புகழ்பெற்ற குகப்பெருமான். இவரது பிறப்பு விந்தையானது. எவருமே தன்னைத் தாயெனக் கருத முடியாதபடி பரம் பொருளான சிவசக்திக்கு வெளித் தோற்றமாக 'ஆத்மாவை புத்ரநாமாஸி' என்ற முறையில் புதல்வனுகத் தோன்றியவர். சூரனை அழிக்கச் செந்தூரில் முகாம் அமைத்துக் கொண்டதால் செந்திலாண்டவர். மேலைக்கடலுக்கு ஸிந்து என்று சிறப்புப் பெயர். இதில் கலக்கின்ற நதியும் 'ஸிந்து' என்று புகழ் பெற்றது. நம் தேசம் இந்தியா எனப் பெயர் பெறச்செய்தது. மேல் கடற்கரை மூலமே விதேசத்தினரால் பாரதம் எளிதில் அடையத் தக்கதாக இருந்தது.

-5-

यथाब्धेस्तरङ्गा लयं यान्ति तुङ्गाः तथैवापदः सन्निधौ सेवतां मे ।
इतीवोर्मिपंक्तीर्नृणां दर्शयन्तं सदा भावये हृत्सरोजे गुहं तम् ॥

யதா(அ)ப்த்தேஸ் தரங்கா லயம் யாந்தி துங்கா:
ததைவாபத: ஸந்நிதௌ ஸேவதாம் மே ।

இதீவோர்மி பங்க்தீர் ந்ருணாம் தர்ஶயந்தம்
ஸதா பாவயே ஹ்ருத்ஸரோஜே குஹம் தம் ॥

*''ஓங்கி உயர்ந்து பாய்ந்து வருகிற கடலின் அலைகள் கரை நோக்கிவந்ததும் மறைவது போல் என் ஸந்நிதிக்கு வருபவரின் நெருக்கடிகளும் மறைந்து விடும்''. என்றவாறு மக்களுக்குக் கடலின் அலைகளை காண்பித்துக் கொண்டிருக்கிற அந்த குகனை தாமரை போன்ற என் உள்ளத்தினுள் எப்போதும் உணர்கிறேன்.''*

குஹர் என இவருக்கு ஒரு சிறப்புப் பெயர். உலகமனைத்தின் மூலப்பொருளாக, பரம்பொருளாக மறைந்திருப்பவர். வேதமும் இவரை மறைபொருளாக உணர்த்தும். சிற்றறிவிற்கு இவரை உணர இயலாதாகையால் சிற்றறிவிற்கு அப்பாற்பட்டவராக மறைந்துள்ளவர். அறியாமை எனும் அஜ்ஞானம் திரையாக மறைக்கிறது. அவரது பேரொளியும் பேராண்மையுமே அவரை நம்மால் உணர இயலாதபடி மறைக்கும். இரு திரைகளால் மறைந்துள்ள மறைபொருள் - குகன்.

## –6–

गिरौ मन्निवासे नरा येऽधिरूढाः तदा पर्वते राजते तेऽधिरूढाः ।
इतीव ब्रुवन् गन्धशैलाधिरूढः स देवो मुदे मे सदा षण्मुखोऽस्तु ॥

கிரௌ மந்நிவாஸே நரா யேऽதிரூடா:
ததா பர்வதே ராஜதே தேऽதிரூடா: ।
இதீவ ப்ருவன் கந்தஶைலாதிரூட:
ஸ தேவோ முதே மே ஸதா ஷண்முகோऽஸ்து ॥

*''என் இருப்பிடமான இந்த (கந்த) மலை மீது ஏறுபவர்கள் வெள்ளிமலையை (கைலாசமலையை) ஏறியவர்களாவார்கள்.'' என்று கூறுபவர் போல் கந்தமாதன மலை மீதமர்ந்த அந்த ஆறுமுகத்தேவன் என்றென்றும் இன்பம் தருபவராகட்டும்.''*

*இறைவன் குடியிருக்கிற செந்தூர் ஆலயம் அவரது நித்யநிவாஸமான கைலேமலேக்கு ஒப்பானது. குன்றுகள் தோறும் ஆடுபவர் இவர். குன்றுகளேப் படைவீடாக்கிக் கொள்வது வீரர் வழக்கம். அப்படி குகர் உவந்து ஏற்றுக் கொண்ட ஆறுபடை வீடுகள் உண்டு. திருச்செந்தூர் அவற்றில் முதலாவது, சூரனுடன் போர்புரிய அமைந்தது இது. திருப்பரங்குன்றம், பழமுதிர்சோலே, பழனி, திருவேரகம் (ஸ்வாமிமலே) திருத்தணி என மற்ற ஐந்து வீடுகள். குகன் கோவில் கொண்ட குன்றுகள் விராலி மலேபோன்றவை எண்ணற்றவை.*

–7–

महांभोधितीरे महापापचोरे मुनीन्द्रानुकूले सुगन्धाख्यशैले ।
गुहायां वसन्तं स्वभासा लसन्तं जनार्तिं हरन्तं श्रयामो गुहं तम् ॥

மஹாம்ப்போதிதீரே மஹாபாபசோரே
முநீந்த்ராநுகூலே ஸுகந்தாக்க்யஸைலே ।
குஹாயாம் வஸந்தம் ஸ்வபாஸா லஸந்தம்
ஜநார்திம் ஹரந்தம் ஶ்ரயாமோ குஹம் தம் ॥

*''பெருங்கடற்கரையில் எல்லா தீவினேகளேயும் பறிக்கவல்லதும் சிறந்த முனிவர்களுக்கு இதமளிப்பதுமான நல்ல ஸுகந்தி மலேயில் குகையினுள் வசிப்பவனும் தன் பேரொளியால் துலங்குபவனும் மக்கள் துயர் தீர்ப்பவனுமான அந்தக் குகனேச் சரணடைவோம்.''*

–8–

लसत्स्वर्णगेहे नृणां कामदोहे सुमस्तोम सञ्छन्नमाणिक्यमञ्चे ।
समुद्यत्सहस्रार्कतुल्य प्रकाशं सदा भावये कार्तिकेयं सुरेशम् ॥

லஸத் ஸ்வர்ணகேஹே ந்ருணாம் காமதோஹே
ஸுமஸ்தோம ஸஞ்ச்சந்நமாணிக்ய மஞ்சே ।
ஸமுத்யத் ஸஹஸ்ரார்க துல்ய ப்ரகாஶம்
ஸதா பாவயே கார்திகேயம் ஸுரேஶம் ॥

*"ஒளிமிக்கத் தங்கமாளிகையில், மக்களின் விருப்பங்களைப் பொழிவதும் பூக்களின் குவியலால் மறைந்துள்ளதுமான மாணிக்கப்பரல்களாலான கட்டிலின் மீதமர்ந்துள்ளவரும் உதிக்கின்ற ஆயிரக்கணக்கான சூரியர் ஒளி போன்ற பேரொளியால் விளங்குபவரும் கிருத்திகா தேவிகளின் தவப்புதல்வனும் தேவர்களின் ஈசனுமான பெருமானை எப்போதும் உள்ளத்தில் உணர்கிறேன்."*

தேவர்களாலான தேவர் படைக்கு இவர் தலைவரானதால் தேவஸேநாபதி, ஸுரேசர்.

–9–

रणद्धंसके मञ्जुलेऽत्यन्त शोणे मनोहारि लावण्यपीयूषपूर्णे ।
मनष्षट्पदो मे भवक्लेशतप्तः सदा मोदतां स्कन्द ते पादपद्मे ॥

ரணத்தம்ஸகே மஞ்ஜுலேऽத்யந்த ஶோணே
மநோஹாரி லாவண்யபீயூஷவர்ஷே ।
மநஷ்ஷட்பதோ மே பவக்லேசதப்த:
ஸதா மோததாம் ஸ்கந்த தே பாதபத்மே ॥

*"கந்த பெருமானே ! ஒலியால் கொஞ்சுகிற சதங்கைகள் பூண்டதும் மிகவும் சிவந்ததும் மனத்தைக்கவர்கிற அழகமுதம். நிரம்பியதுமான உன் திருவடியில், பிறவித்துயரால் வாடிய என் மனமாகிய வண்டு எப்போதும் (தேன் பருகிக்)களிப் படையட்டும்." குமரனைச் செவ்வேள் என்பர். அவர் மேனிநிறம் இளம் சூரியனைப் போல் சிவந்தது. அவரது திருவடியும் இயல்பாகச் சிவந்ததே.*

–10–

सुवर्णाभ दिव्याम्बरैः भासमानां क्वणत् किंकिणी मेखलाशोभमानाम् ।
लसद्धेमपट्टेन विद्योतमानां कटिं भावये स्कन्द ते दीप्यमानाम् ॥

ஸுவர்ணாப திவ்யாம்பரை: பாஸமாநாம்
க்வணத் கிங்கிணீ மேகலாஶோபமாநாம் ।

லஸத்தேமபட்டேந வித்யோதமாநாம்
கடிம் பாவயே ஸ்கந்த தே தீப்யமாநாம் ॥

*"கந்த பெருமானே ! தங்கம் போன்று ஒளிர்கின்ற தெய்விக ஆடைகளால் துலங்குவதும், சதங்கைகளின் ஒலி கொண்ட சங்கிலியால் அழகியதும், ஒளிமிக்க தங்கப்பட்டியால் விளங்குவதுமான ஒளிர்கின்ற உன் இடுப்பை மனத்தினுள் கண்டு அனுபவிக்கிறேன்."*

வேதங்களின் உட்பொருள் தன் மேனிலேயிலிருந்து இறங்கி நெகிழ்ந்து உள்ளத்தளவில் உணரத் தக்கதாக உருக் கொள்வதால் ஸ்கந்தர் - கந்தர். நழுவி நெகிழ்ந்து அடியார் விரும்பியபடி தோன்றுபவர். இறைவன் நம் நிலேக்கு இறங்கி, நமக்குப் புலனுகும்படி தோன்றுகிருன். இதனே அவதாரம் (கீழ் இறங்குதல்) என்பர். அவர் இறங்குவது நம்மைத் தூக்கிக் கரை ஏற்றவே. **உத்தாரண:** (நம்மை கரை ஏற்றுபவர்). **துஷ்க்ருதிஹா** - நம்மை அழுத்துகிற தீவினேயை அகற்றுபவர்) **புண்ய:** (நாம் மேன்மை பெற உதவுகிற அவரது தரிசனம், நாமஸ்மரணம் முதலிய புண்யமாயிருப்பவர்). (விஷ்ணு ஸஹஸ்ரநாமங்கள் (923-925).

## -11-

पुलिन्देशकन्या घनाभोग तुङ्गस्तनालिङ्गनासक्त काश्मीर रागम् ।
नमस्याम्यहं तारकारे तवोरः स्वभक्तावने सर्वदा सानुरागम् ॥

புலிந்தேஶகன்யா க்கநாபோக துங்க -
ஸ்தநாலிங்க நாஸக்த காச்மீர ராகம் ।
நமஸ்யாம்யஹம் தாரகாரே தவோர:
ஸ்வபக்தாவநே ஸர்வதா ஸாநுராகம் ॥

*"தாரகனே மாய்த்தவரே ! வேடத் தலேவனின் புதல்வியின் கனத்து பருத்து மேடிட்ட மார்பகத்தை அணேத்ததால் குங்குமப்பூக்குழம்பின் செம்மை படிந்ததும், தன் அடியார்களேக் காப்பதில் ஆர்வங்கொண்டதுமான உமது மார்பை எப்போதும் கண்டு வணங்குகிறேன்."*

*நாடும் பொருளிற்கு அடிமையாகிற மக்களின் பார்வையில் தாமும் காதல் வயப்படுபவனே எனக் காட்டிக் கொள்வது மக்கள் மனம் கவரவே.*

## -12-

विधौ क्लृप्त दण्डान् स्वलीलोद्धृताण्डान् निरस्तेभशुण्डान् द्विषत्कालदण्डान् ।
हतेन्द्रारिषण्डान् जगत्त्राणशौण्डान् सदा ते प्रचण्डान् श्रये बाहुदण्डान् ॥

விதௌ க்லுப்த தண்டான் ஸ்வலீலாத்த்ருதாண்டான்
நிரஸ்தேப ஶுண்டான் த்விஷத் கால தண்டான் ।
ஹதேந்த்ராரிஷண்டான் ஜகத்த்ராணஶௌண்டான்
ஸதா தே ப்ரசண்டான் ஶ்ரயே பாஹுதண்டான் ॥

*உமது தடித்த கைகள், பிரும்மாவிற்குத் தண்டனை விதித்தவை. விளையாட்டாக அனைத்துப் பிரும்மாண்டங்களையும் தாங்குபவை. யானையின் துதிக்கையைத் தோற்கச் செய்பவை, எதிரிகளுக்கு யமனின் கைத்தடிகளானவை, இந்திரனின் எதிரிக்கூட்டத்தை மாய்த்தவை. உலகின் பாதுகாப்பில் நிகரற்ற ஆற்றல் பெற்றவை. வீர்யம் மிக்கவை. அவற்றைச் சரணடைகிறேன்."*

*பிரும்மாவின் அகந்தையைச் சிதைக்கப் பிரணவத்தின் உட்பொருளை அறியவில்லை என அவரைச் சிறையிலடைத்தவர்.*

## -13-

सदा शारदाः षण्मृगाङ्काः यदि स्युः समुद्यन्त एव स्थिताश्चेत् समन्तात् ।
सदा पूर्ण बिम्बाः कलङ्कैश्च हीनाः तदा त्वन्मुखानां ब्रुवे स्कन्द साम्यम् ॥

ஸதா ஶாரதா: ஷண்ம்ருகாங்கா: யதி ஸ்யு:
ஸமுத்யந்த ஏவ ஸ்த்திதாஶ்சேத் ஸமந்தாத் ।
ஸதா பூர்ண பிம்பா: கலங்கைஶ்ச ஹீநா:
ததா த்வந்முகாநாம் ப்ருவே ஸ்கந்த ஸாம்யம் ॥

*"கந்தபெருமானே ! சரத்ருதுவில் தோன்றுகிற ஆறு பூர்ண சந்திரர்கள் உதிக்கின்ற நிலேயிலேயே (மறையாதபடி) எங்கும் அவர்கள் காணப்பெறுபவராக, உருவ நிறைவுள்ளவர்களாக களங்கமற்றவர்களாக ஒருக்கால் இருப்பார்களேயானல் அவர்களே, உமது திருமுகங்களுடன் ஒப்பிட்டுச் சொல்வேன்."*

இருப்பது ஒரே சந்திரன். ஆண்டிற்கு ஒரு முறை சரத்ருது. அதன் இரவுகளில் மட்டும் பூர்ணன். மேகங்களில் மறைபவன். கலங்கமுள்ளவன். எங்கும் காணப் பெறுபவனுமல்ல. அதனல் இது என்றும் நடைபெருததொன்று.

## -14-

स्फुरन्मन्दहासैः सहंसानि च चञ्चत् कटाक्षावली भृंग संघोज्ज्वलानि ।
सुधास्यन्दि बिम्बाधराणीशसूनो तवालोकये षण्मुखांभोरुहाणि ।।

ஸ்ப்புரன் மந்தஹாஸை: ஸஹம்ஸாநி சஞ்சத் -
கடாக்ஷாவலீப்ப்ருங்க ஸங்க்கோஜ்வலாநி ।
ஸுதாஸ்யந்தி பிம்பாதராணீஶ ஸூநோ
தவா லோகயே ஷண்முகாம்ப்போ ருஹாணி ॥

*"ஈசனின் திருமகனரே ! உமது ஆறு திருமுகத்தாமரைகளேக் காண்கிறேன். அவை இனிய புன்சிரிப்பாகிற அன்னப்பறவைகளால் சூழப்பெற்றவை. எப்போதும் இங்குமங்கும் அசைகின்ற கடைக்கண்களின் வரிசையாகிற வண்டுக் கூட்டத்தால் சிறப்பாக ஒளிர்பவை. அமுதம் கசிகின்ற கோவைப்பழம் போன்ற உதடுகளுடன் கூடியவை."*

## -15-

विशालेषु कर्णान्तदीर्घेष्वजस्रं दयास्यन्दिषु द्वादशस्वीक्षणेषु ।
मयीषत्कटाक्षः सकृत्पातितश्चेत् भवेत्ते दयाशील का नाम हानिः ? ।।

விஶாலேஷு கர்ணாந்த தீர்க்கேஷ்வஜஸ்ரம்

தயாஸ்யந்திஷு த்வாதஶஸ்வீக்ஷணேஷு ।
மயீஷத்கடாக்ஷ: ஸக்ருத் பாதிதஶ்சேத்
பவேத் தே தயாஶீல கா நாம ஹாநி: ॥

*''பரிவை இயல்பாகக் கொண்டவரே ! தடையற்று விசாலமானவையும் காதுவரை நீண்டவையும் எப்போதும் பரிவுக்கசிவுள்ளவையுமான பன்னிரு கண்களிருக்கும் போது, ஒரு தடவை ஒரு கடைக்கண் பார்வை என் மீது பதிவதால் ஐயனே ! உமக்கு என்ன குறை நேரும் !''*

*பாதையின் இரு ஓரங்களிலும் கல் நட்டு இதை மீறுவது அபாயம் எனத் தெரிவிப்பதால் பாதை சாலையாகிறது. வீட்டின் சுற்றுப்புறத்திலும் சுவர் எழுப்பித்தடுப்பதால் போஜனசாலை சயன சாலை கோசாலை என்றுகிறது. தடையற்றிருப்பதால் கடைக்கண்கள் சாலையற்று விசாலமாகின்றன.*

–16–

सुताङ्गोद्भवो मेऽसि जीवेति षड्धा जपन्मन्त्रमीशो मुदा जिघ्रते यान् ।
जगद्भारभृद्भ्यो जगन्नाथ ! तेभ्यः किरीटोज्ज्वलेभ्यो नमो मस्तकेभ्यः ॥

ஸுதாங்கோத்பவோ மேऽஸி ஜீவேதி ஷட்த்தா
ஜபந் மந்த்ரம் ஈஶோ முதா ஜிக்ரதே யான் ।
ஜகத்பார ப்ப்ருத்ப்யோ ஜகந்நாத ! தேப்ய:
கிரீடோஜ்ஜ்வலேப்யோ நமோ மஸ்தகேப்ய: ॥

*உலகின் தலைவரே ! ''என் புதல்வனே ! என் ஒவ்வொரு அவயவத்திலிருந்தும் நீ உருப்பெற்றிருக்கிருய். நீ நீண்டநாள் வாழ்வாய்'' என்ற மந்திரத்தை சிவபெருமான் ஆறு தடவை ஜபித்து எந்த ஆறு முகங்களை முகர்ந்தாரோ, உலகின் பாதுகாப்புச் சுமையைத் தாங்குகின்றவையும் கிரீடங்களால் ஒளி மிக்கவையுமான அந்த ஆறு தலைகளுக்கும் நமஸ்காரம்.''*

**''அங்காதங்காத் ஸம்பவஸி ஹ்ருதயாதபி ஜாயஸே ! ஆத்மா வை புத்ரநாமாஸி த்வம் ஜீவ ஶரதாம் ஶதம்''** என்பது அந்த மந்திரம்.

## –17–

स्फुरद्रत्न केयूरहाराभिरामः चलत्कुण्डलश्री - लसद्गण्डभागः ।
कटौ पीतवासाः करे चारुशक्तिः पुरस्तान्ममास्तां पुरारेस्तनूजः ॥

ஸ்ப்புரத் ரத்ந கேயூர ஹாராபிராம:
சலத் குண்டலஶ்ரீ லஸத்கண்டபாக: ।
கடௌ பீதவாஸா: கரே சாருஶக்தி:
புரஸ்தான் மமாஸ்தாம் புராரேஸ்தநூஜ: ॥

*"ஒளிமிக்க இரத்தினங்கள் பதித்த தோள்வளையணியாலும் ஹாரத்தாலும் அழகுடன் விளங்குகின்றவரும், அசைந்தாடுகின்ற குண்டலத்தின் ஒளியால் துலங்குகின்ற கன்னப் பகுதி உடையவரும், இடுப்பில் செம்மஞ்சளாடையுடுத்தியவரும் கைகளில் சக்தி ஆயுதம் ஏந்தியவருமான திரிபுரமெரித்தவரின் புதல்வர் என் முன் தோன்றட்டும்."*

## –18–

इहायाहि वत्सेति हस्तान्प्रसार्याह्वयत्यादरात् शंकरे मातुरङ्कात् ।
समुत्पत्य तातं श्रयन्तं कुमारं हराश्लिष्टगात्रं भजे बालमूर्तिम् ॥

இஹாயாஹி வத்ஸேதி ஹஸ்தான் ப்ரஸார்யா -
ஹ்வயத்யாதராத் ஶங்கரே மாதுரங்காத் ।
ஸமுத்பத்ய தாதம் ஶ்ரயந்தம் குமாரம்
ஹராஶ்லிஷ்ட காத்ரம் பஜே பாலமூர்திம் ॥

*"குழந்தாய் ! இங்கே வா ! எனக் கைகளை விரித்துப் பரிவுடன் சங்கரர் கூப்பிடத் தாயின் மடியிலிருந்து குதித்துத் தந்தையை அடைந்து, தந்தையான சிவபெருமானுல் உடல் முழுவதும் அடங்க அணைக்கப்பெற்றவருமான பால வடிவினரான குமரனை வழிபடுகிறேன்."*

*எப்போதுமே சிறுவனுகக் காட்சி தருவதால் பால என்ற அடைமொழிச்சொல் பெயர்ச் சொல்லாகவும்,*

பாலஸுப்ரஹ்மண்யர், பாலகுமாரர் என்றவாறும் இவரிடம் பயன்படும்.

-19-

कुमारेशसूनो ! गुह ! स्कन्द ! सेनापते ! शक्तिपाणे ! मयूराधिरूढ ! ।
पुलिन्दात्मजाकान्त ! भक्तार्तिहारिन् ! प्रभो ! तारकारे ! सदा रक्ष मां त्वम् ॥

குமாரேஶஸூநோ ! குஹ ! ஸ்கந்த ! ஸேநா -
பதே ! சக்திபாணே ! மயூராதிரூட ! ।
புலிந்தாத்மஜா காந்த ! பக்தார்திஹாரின் !
ப்ரபோ ! தாரகாரே ! ஸதா ரக்ஷ மாம் த்வம் ॥

*"குமரா ! ஈசனின் புதல்வரே ! குகனே ! ஸ்கந்தரே ! ஸேநாதிபதியே ! சக்தியைக் கையில் கொண்டவரே ! மயில் மீதமர்ந்தவரே ! வேடர் மகளின் மணாளரே ! அடியாரின் துயரகற்றியவரே ! எல்லாம் வல்லவரே ! தாரகாசுரனின் எதிரியே ! என்னை எப்போதும் நீர் காப்பாற்றுவீர்."*

மன்மதனைப் பழிக்கின்ற வடிவழகு கொண்டதால் குமாரர். (மன்மதன் -மார:) எப்போதும் இளைஞர் என்பதாலும் குமாரர். பிரும்மசாரியும் குமாரனே. பாரதத்தின் வட நாட்டில் இவரைக் குமாரப்பிரும்மசாரியாகவே வழிபடுவர். பராசக்தி தன் சக்தி முழுவதையும் திரட்டி சக்தி ஆயுதமாக்கிச் சூரனை வெல்லப்புறப்பட்ட குமாரனிடம் அளித்தாள்.

-20-

प्रशान्तेन्द्रिये नष्टसंज्ञे विचेष्टे कफोद्गारिवक्त्रे भयोत्कंपिगात्रे ।
प्रयाणोन्मुखे मय्यनाथे तदानीं द्रुतं मे दयालो भवाग्रे गुह त्वम् ॥

ப்ரஶாந்தேந்த்ரியே நஷ்டஸம்ஜ்ஞே விசேஷ்டே
கபோத்காரி வக்த்ரே பயோத்கம்பி காத்ரே ।
ப்ரயாணோந்முகே மய்யநாதே ததானீம்
த்ருதம் மே தயாளோ பவாக்ரே குஹ த்வம் ॥

*"தயைமிக்கவரே! குகப்பெருமானே! புலன்கள் வலிவிழந்து அடங்கி, உணர்வு நீங்கி, இயக்கம் குன்றி, வாயில் கபம் வெளிவர, மரணபயத்தால் உடல் நடுங்க, காப்பற்றவனுக உயிர் வெளியேறுகிற நிலையிலுள்ளபோது எனது எதிரில் விரைவுடன் நீர் இருப்பீர்."*

அப்போதைக்கிப்போதே சொல்லி வைத்தேன் என்று அடியார்கள் தம் வாழ்நாளின் இறுதியில் இறைவனே இந்த ஜீவனின் மேன்மைக்கான பொறுப்பேற்க வேண்டுமெனக் கோருவர். இதனை 20-21-22 சுலோகங்களில் வேண்டுகிருர்.

## -21-

कृतान्तस्य दूतेषु चण्डेषु कोपात् दहच्छिन्धि भिन्धीति मां तर्जयत्सु ।
मयूरं समारुह्य मा भैरिति त्वं पुरश्शक्तिपाणिर्ममायाहि शीघ्रम् ॥

க்ருதாந்தஸ்ய தூதேஷு சண்டேஷு கோபாத்
தஹச்சிந்த்தி பிந்த்தீதி மாம் தர்ஜயத்ஸு ।
மயூரம் ஸமாருஹ்ய மாபைரிதி த்வம்
புரஶ்ஶக்திபாணிர் மமாயாஹி ஶீக்ரம் ॥

*"முடிவை நோக்கி என்னை இட்டுச்செல்கிற யமனின் அச்சம் ஊட்டுகிற தூதுவர்கள் கோபத்துடன் எரி! வெட்டு! பிளந்து போடு! என்று என்னைப்பயமுறுத்தும் போது, மயில் மீதேறி சக்தியை ஏந்தி என் எதிரில் விரைவுடன் நீர் வருவீர்."*

## -22-

प्रणम्यासकृत् पादयोस्ते पतित्वा प्रसाद्य प्रभो प्रार्थयेऽनेक वारम् ।
न वक्तुं क्षमोऽहं तदानीं कृपाब्धे न कार्याऽन्तकाले मनागप्युपेक्षा ॥

ப்ரணம்யாஸக்ருத் பாதயோஸ்தே பதித்வா
ப்ரஸாத்ய ப்ரபோ ப்ரார்த்தயேऽநேகவாரம் ।
ந வக்தும் க்ஷமோऽஹம் ததாநீம் க்ருபாப்த்தே
ந கார்யாऽந்தகாலே மநாகப்யுபேக்ஷா ॥

*"கருணைக்கடலே ! உன் திருவடிகளில் பல தடவை விழுந்து வணங்கி மகிழ்வித்துப் வேண்டி நிற்கிறேன். அப்போது நான் பேச இயலாதவனாக இருப்பேன். அந்த இறுதி நேரத்தில் சிறிதும் பராமுகம் காட்டக்கூடாது."*

## -23-

सहस्राण्डभोक्ता त्वया शूरनामा हतस्तारकस् सिंहवक्त्रश्च दैत्यः ।
ममान्तर्हृदिस्थं मनःक्लेशमेकं न हंसि प्रभो किं करोमि क्व यामि ॥

ஸஹஸ்ராண்டபோக்தா த்வயா ஶூரநாமா
ஹதஸ்தாரகஸ் ஸிம்ஹவக்த்ரஶ்ச தைத்ய: ।
மமாந்தர் ஹ்ருதிஸ்த்தம் மந:க்லேஶமேகம்
ந ஹம்ஸி ப்ரபோ கிம் கரோமி க்வயாமி ॥

*"ஆயிரம் ப்ரும்மாண்டங்களையும் ஆண்டு அனுபவித்த சூரன் என்ற அசுரன், தாரகன், மற்றும் சிங்கமுகன் உம்மால் அழிக்கப்பட்டார்கள். என்இதயத்தினுள்ள மனக்கிலேசம் என்ற ஒன்றே ஒன்றை நீர் மாய்க்கவில்லையே ! என் தலைவரே ! நான் என்ன செய்வேன் ? எங்கு செல்வேன் ?"*

## -24-

अहं सर्वदा दुःख भारावसन्नो भवान् दीनबन्धुस् त्वदन्यं न याचे ।
भवद्भक्तिरोधं सदा क्लृप्तबाधं ममाधिं द्रुतं नाशयोमासुत त्वम् ॥

அஹம் ஸர்வதா து:க்க பாராவஸந்நோ
பவான் தீநபந்த்துஸ் த்வதந்யம் ந யாசே ।
பவத்பக்திரோதம் ஸதா க்லுப்தபாதம்
மமாதிம் த்ருதம் நாஶயோமாஸுத த்வம் ॥

*"உமையின் மைந்தரே ! நான் பெருந்துயரச் சுமையில் அழுந்தி நிற்பவன். நீரோ துயருற்ற எளியவருக்கு உதவுகிற உற்றவர். நான் வேறெவரிடமும் வேண்டேன். உம்மிடம் பக்தி கொள்வதில் தடையாகி எப்போதும் வாட்டுகின்ற என் மனத்துயரை நீர் விரைவில் அழிப்பீர் !"*

-25-

अपस्मार कुष्ठक्षयार्शः प्रमेहज्वरोन्मादगुल्मादिरोगाः महान्तः ।
पिशाचाश्च सर्वे भवत्पत्र भूतिं विलोक्य क्षणात्तारकारे द्रवन्ते ॥

அபஸ்மார குஷ்ட்டக்ஷயார்ஶ: ப்ரமேஹ -
ஜ்வரோந்மாதகுல்மாதிரோகா: மஹாந்த: ।
பிஶாசாஶ்ச ஸர்வே பவத் பத்ர பூதிம்
விலோக்ய க்ஷணாத் தாரகாரே த்ரவந்தே ॥

*"தாரகனின் எதிரியே! அபஸ்மாரம், குஷ்டம், க்ஷயம், மூலம், நீரிழிவு, ஜ்வரம், பயித்தியம், வயிற்றுக்கட்டி முதலிய பெருநோய்களும் பிசாசுகளும் அனைத்தும் உமது இலை விபூதியைக் கண்டதும் நொடியில் ஓடி மறைகின்றனவே!"*

இலை விபூதி என்பது திருச்செந்தூரில் இறைவனின் அருட்பிரஸாதமாக அளிக்கப்பெறுவது. வேதமே பன்னீர் மரமாகி அதன் இலை வழியே இறைவன் அருளை நம்மிடம் சேர்க்கிறது. துயர் நீக்கம் பெற இதனைத் தரிப்பர்.

-26-

दृशि स्कन्द मूर्तिः श्रुतौ स्कन्दकीर्तिः मुखे मे पवित्रं सदा तच्चरित्रम् ।
करे तस्य कृत्यं वपुस्तस्य भृत्यं गुहे सन्तु लीनाः ममाशेषभावाः ॥

த்ருஶி ஸ்கந்த மூர்தி: ஶ்ருதௌ ஸ்கந்தகீர்தி:
முகே மே பவித்ரம் ஸதா தச்சரித்ரம் ।
கரே தஸ்ய க்ருத்யம் வபுஸ்தஸ்ய ப்ப்ருத்யம்
குஹே ஸந்து லீநா: மமா ஶேஷபாவா: ॥

*"என் கண்ணில் கந்தனின் வடிவம், காதில் கந்தனின் புகழ், வாயில் எப்போதும் அவரது புனிதவரலாறு; கையில் அவருக்கான திருப்பணி. உடல் அவனது அடிமை. எனது அனைத்து உணர்வுகளும் குகனிடம் பதியட்டும்!"*

-27-

मुनीनामुताहो नृणां भक्तिभाजां अभीष्टप्रदाः सन्ति सर्वत्र देवाः ।
नृणामन्त्यजानामपि स्वार्थदाने गुहाद् देवमन्यं न जाने न जाने ।।

முநீநாமுதாஹோ ந்ருணாம் பக்திபாஜாம்
அபீஷ்டப்ரதா: ஸந்தி ஸர்வத்ர தேவா: ।
ந்ருணாமந்த்யஜாநாமபி ஸ்வார்த்ததாநே
குஹாத் தேவமந்யம் ந ஜாநே ந ஜாநே ॥

*"உள்ளம் உடல் அனைத்தையுமடக்கிப் பக்தியுடன் வழிபடுபவருக்கு விரும்பியதைத் தரப் பல தேவர்கள் உள்ளனர். கடையராகப் பிறந்த மக்களுக்கும் அவர்கள் விரும்பியதைத் தருகிற தெய்வம் குகனைத் தவிர வேறொருவரை நான் அறியேன், நான் அறியேன்."*

கடும் நியமங்கள் மூலம் தெய்வ அருள் பெறுவது வெகு சிலருக்கே இயலும். பாமரனிடம் அவனது நிலைக்கேற்ப இறங்கி வருபவர் குமரக் கடவுள்.

-28-

कलत्रं सुता बन्धुवर्गः पशुर्वा नरो वाऽथ नारी गृहे ये मदीयाः ।
यजन्तो नमन्तः स्तुवन्तो भवन्तं स्मरन्तश्च ते सन्तु सर्वे कुमार ।।

கலத்ரம் ஸுதா: பந்த்துவர்க: பஶுர்வா
நரோ வாऽத நாரீ க்ருஹே யே மதீயா: ।
யஜந்தோ நமந்த: ஸ்துவந்தோ பவந்தம்
ஸ்மரந்தஶ்ச தே ஸந்து ஸர்வே குமார ॥

*"குமரனே! மனைவி, மக்கள், உற்றார், கால் நடைகள், ஆணோ பெண்ணோ, என் வீட்டில் என்னைச்சார்ந்தவர் அனைவரும் எப்போதும் உம்மை வழிபடுபவராக, வணங்குபவராக, துதிப்பவராக, உள்ளத்தில் கொள்பவராக இருக்கட்டும்."*

-29-

मृगाः पक्षिणो दंशका ये च दुष्टाः तथा व्याधयो बाधका ये मदङ्गे ।
भवच्छक्ति तीक्ष्णाग्रभिन्नास् सुदूरे विनश्यन्तु ते चूर्णितक्रौञ्चशैल ॥

ம்ருகா: பக்ஷிணோ தம்ஶகா: யே ச துஷ்டா:
ததா வ்யாதயோ பாதகா யே மதங்கே ।
பவச்ச்சக்தி தீக்ஷ்ணாக்ர பிந்நாஸ் ஸுதூரே
விநஶ்யந்து தே சூர்ணிதக்ரௌஞ்சஶைல ॥

*"க்ரௌஞ்சமலையைத் தூளாக்கியவரே ! மிருகங்களோ பறவைகளோ, கொசுக்களோ, நோய்களோ, என் உடலை எவை துன்புறுத்துகின்றனவோ, அவை உமது வேலின் கூரான முனையால் குத்திப் பிளக்கப்பட்டவையாக தூரத்தில் அழியட்டும்."*

-30-

जनित्री पिता च स्वपुत्रापराधं सहेते न किं देवसेनाधिनाथ ।
अहं चातिबालो भवान् लोकतातः क्षमस्वापराधं समस्तं महेश ॥

ஜநித்ரீ பிதா ச ஸ்வபுத்ராபராதம்
ஸஹேதே ந கிம் தேவஸேநாதிநாத ।
அஹம் சாதிபாலோ பவான் லோகதாத:
க்ஷமஸ்வாபராதம் ஸமஸ்தம் மஹேஶ ॥

*"தேவசேனையின் மணாளரே ! பேராண்மை மிக்கவரே ! தாயோ தந்தையோ மகன் செய்தவற்றைப் பொறுப்பதில்லையா ? நானோ மிகவும் சிறுவன். நீரோ உலகின் தந்தை. எனது தவறுகளனைத்தையும் பொறுத்தருள்வீர்."*

-31-

नमः केकिने शक्तये चापि तुभ्यं नमश्छाग तुभ्यं नमः कुक्कुटाय ।
नमः सिन्धवे सिन्धुदेशाय तुभ्यं पुनः स्कन्दमूर्ते नमस्ते नमोऽस्तु ॥

நம: கேகிநே ஶக்தயே சாபி துப்யம்
நமஶ்ச்சாக துப்ப்யம் நம: குக்குடாய ।
நம: ஸிந்த்தவே ஸிந்த்துதேஶாய துப்ப்யம்
புந: ஸ்கந்தமூர்த்தே நமஸ்தே நமோऽஸ்து ॥

*"மயிலுக்கு நமஸ்காரம். வேலுக்கு நமஸ்காரம். ஆடே ! உமக்கு நமஸ்காரம். கோழிக்கு நமஸ்காரம். கடலுக்கு நமஸ்காரம். கடலையொட்டிய தேசத்திற்கு நமஸ்காரம். ஸ்கந்த பெருமானே ! மறுபடி உமக்கு நமஸ்காரம் - உமக்கு நமஸ்காரம்."*

ஆடு இவரது வாகனம். அக்னியின் வாகனமும் அதுவே. அக்னியும் இவரது தந்தை நிலை பெறுகிறார். கோழி சூரபத்மன் பக்தி நிலையால் பெற்றவடிவம்.

## -32-

जयानन्दभूमन् ! जयापारधामन् ! जयामोघकीर्ते ! जयानन्दमूर्ते ।
जयानन्दसिन्धो ! जयाशेषबन्धो ! जय त्वं सदा मुक्तिदानेशसूनो ॥

ஜயாநந்தபூமன் ! ஜயாபாரதாமன் !
ஜயாமோககீர்த்தே ! ஜயாநந்தமூர்த்தே ।
ஜயாநந்த ஸிந்த்தோ ! ஜயாஶேஷபந்த்தோ !
ஜய த்வம் ஸதா முக்திதாநேஶஸூநோ ॥

*ஆனந்தத்தின் முழு வடிவமே ! வெல்வீர். எல்லையற்ற ஆற்றல் பெற்றவரே ! வெல்வீர். மங்காத புகழுடையவரே ! வெல்வீர். ஆனந்த வடிவினரே ! வெல்வீர். ஆனந்தக்கடலே ! வெல்வீர். அனைவருக்கும் உற்றவரே ! வெல்வீர். முக்தியளிப்பவரே ! ஈசனின் புதல்வரே ! எப்போதும் வெல்வீர்.*

## -33-

भुजंगाख्यवृत्तेन क्लृप्तं स्तवं यः पठेद्भक्तियुक्तो गुहं संप्रणम्य ।
स पुत्रान्कलत्रं धनं दीर्घमायुः लभेत् स्कन्द सायुज्यमन्ते नरस्सः ॥

புஜங்காக்க்ய வ்ருத்தேந க்லுப்தம் ஸ்தவம் ய:
படேத்ப்பக்தியுக்தோ குஹம் ஸம்ப்ரணம்ய ।
ஸ புத்ரான் கலத்ரம் தநம் தீர்க்கமாயு:
லபேத் ஸ்கந்த ஸாயுஜ்ய மந்தே நரஸ்ஸ: ॥

''புஜங்கமெனும் யாப்புமுறையில் அமைக்கப்பெற்ற இந்த துதியை குகப் பெருமானை நன்கு வணங்கிப் பக்தியுடன் சொல்பவர் மக்கள் மனைவி செல்வம் நீண்ட ஆயுள் என அனைத்தும் பெற்று இறுதியில் கந்தபெருமானுடன் இணைவர்!''

நீருண்டு, பொழிகின்ற காருண்டு,
விளைகின்ற நிலனுண்டு, பலனுமுண்டு
நிதியுண்டு, துதியுண்டு, மதியுண்டு,
கதிகொண்ட நெறியுண்டு, நிலையுமுண்டு
ஊருண்டு பேருண்டு, மணியுண்டு, பணியுண்டு,
உடையுண்டு, கொடையுண்டு,
வண்டுண்டு மகிழவே உணவுண்டு
சாந்தமுறும் உளமுண்டு, வளமுமுண்டு
தேருண்டு, கரியுண்டு, பரியுண்டு,
மற்றுள்ள செல்வங்கள் யாவுமுண்டு,
தேனுண்டு வண்டுறு கடம் பணிய
நின்பதத்தியானமுண்டாயிலரசே
தாருண்ட சென்னையிற் கந்தகோட்டத்துள்
வளர் தவமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச்
சைவமணி சண்முகத் தெய்வமணியே.

—திருவருட்பா

